நகவுறமுன்றலமினுஞ்சஞ்சரித்துவிரைவுடனொத்தத்
தலத்துமுள்ள
நிகரில்லிலிங்கமெலாங்கண்டுபூசித்துவா
ரினைத்தான்மன்றே (7)

வேறு

பூமேலெந்தக்காரியமும்பொருந்தமுடிக்கும்வல்லமையா
னாமேசிறந்தோம்பெருவயிற்றோனமருதலைமையனிவனாலென்
னாமேயெனவுநினைத்தனன்றேனருந்திவரிவண்டிசைபாடுந் [ல்
தேமேவிதழிச்சடைப்பெருமான்றிருமுன்னெய்திச்செப்புவனா

நிந்தையறுநற்றாயசிவநிசிதானுனைத்தினமுறலா
லந்தவிரவின்மூவுலகமனைத்தும்விரைவிற்சென்றெனது
சிந்தையுவப்பவவனுறையுமிலிங்கமனைத்துந்தெரிசனஞ்செய்
தெந்தைவருவல்லிடையருளென்றிசைத்தானவனுமீந்தனனால்.

வேறு

கருங்கடலின்முகட்டிடைநின்றெழுந்தவிளங்கிரணதிவா
கரன்போற்சோதி
தருங்கலவமயிலிவர்ந்துசிவநிசியவ்விரவிடையெச்
சகத்துமுள்ள
பெருங்கருணைச்சுயம்பிலிங்கமனைத்தையுமேதெரிசிப்பா
ன்பெரிதுநாடிச்
சுருங்குமிடைக்குறமடந்தைமருவுகுகனதிகவனத்
தொடுசென்றானால். (10)

வேறு

மின்னவிரொளிகூர்செய்யவேற்படைக்குமரனென்னும்
பின்னவன்றனையிகழ்ந்தபெற்றியுஞ்செருக்குநோக்கி

---

10. தெரிசிப்பான் என்பதில்-பான் வினையெச்சவிகுதி தெரிசித்தற்கு என்பதுபொருள்.

முன்னவனென்னுநதநதிமுகததவன் றனதுதாளைத
பொன்னடியனததுள்வைததுபபுரிந்தனனிடடைமாதோ. (11)

உறறுபோனபானிடடையுளுறறுமவேலலைதன்னிற
கறலைறயஞசடையான்மைநதன்கணடனனகருததிலெலஙகும
பற்றுசெஞசோதிவீசப்பறபலகோடிஙகளு
சுறறிடநடுவிறறோனறுஞசுயமபெனுமிலிஙகமொனறை. (12)

நிடடைவிட்டெழுநதுபோநதுநிகரிலாததனதுதாளைத
மட்டவிழ்கமலபபாதமவணஙகிநினறியமபினுறற
றட்டறுநிடடையாறறிததனதுளததிலடததானகண்ட
கட்டறுசுயம்பிலிங்கககாடசியையவனுககமமா. (13)

இயம்பலுஙகேடடதாளையியமபுவானிடடைசெயது
வியன்பெறுகருததினீதானவிபபுறககணடலிஙக
மயன்றிருமாலுஙகாண்டறகரியதுனனனபாலநதச
சுயமபிலிங்கதலைதநிறகுததோறறுவிததனனெமநதோனறுல. ( )

தோமின்மூவுலகததுளளசுயமபிலிஙகஙகடகெலலா
மாமிதுமூலமிநதவருடகுறியுறையுநதான
நாமவிபுகழ்பெற்றோஙகுஞானபாசுரமாமநதச
சேமமார்தலததிறசெனறுசிவநிசியதனினமாதோ. (15)

பொருவறுசாமநானகுமபூசனையியறறிநீதான
வருகவென்றுரைததானமிககமனமகிழவுறறுததநதை
திருவடியிலைறஞசிபபோறறிததிசழதருமாகுவெனனக
கருதுவாகனததிலாரோகணமபுரிநதேகினுனுல. (16)

ஞானபாசுரததிலெயதினன்னுநிடடேசபகனைகத
தூநறுமபுனலின்மூழ்கிததுலஙகுருததிராககமபூண்டு

---

13. தட்டு-குற்றம.
14. வியன்-பெருமை
15. தோம-குறறம.
16. ஆரு-பெருசசாளி ஆரோகணம ஏறுதல
17. தூ-சுததம் மானம-பெருமை.

மானவெண்ணீறுசாத்திவாய்ந்தகற்பூசைக்கேற்ற
வானகற்பொருள்கள்யாவுமகத்தினுலமைத்துமன்றே. (17)

இடமொடுதனதுதூயசித்தமோர்வழிநிறுத்தி
யிடாறுகளின்மேவுமிலிங்கத்தின்கீழ்பாலுற்று
வடதிசைநோக்கிப்பாரில்வைகியலிங்கமெல்லாம்
படிவமொன்றுற்றதென்னப்பாவனைபுரிந்துமாதோ. (18)

பன்னுமத்தலத்தின்மேவுமபாணிறவிலிங்கந்தன்னைத்
தன்னுளத்திடைதியானந்தான்புரிந்திருக்குமெல்லை
மன்னுமச்சிவலிங்கத்தின்மருங்குநான்கினுமேசூழ்ந்து
துன்னியேயிருந்தவட்டமாதுலங்குபல்கோடிலிங்கம். (19)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தவளநிறங்கரியநிறஞ்செய்யநிறமுதலாச்
சாற்றுநானாவிதமாகியநிறங்கண்மருவி
நவமுறுவட்டஞ்சதுரமுக்கோணமுதலா
நவிலும்வடிவங்கள்பலபடைத்துமலைமயமா
யுவகையுறுசிலைமயமாயுளத்திலதிசயமே
யுற்றிடுபுற்றின்மயமாயோங்குமணன்மயமாய்ப்
புவனமிசையெவருமிகப்புகழ்தருமண்மயமாய்ப்
பொலிந்தனவற்புதசிவலிங்கங்கள்பலபலவே. (20)

அறுசீர்க்கழிநெடிலடியகவல் விருத்தம்.

விரவுவைடூரியங்கோமேதகம்புட்பராக
மரகதத்தரளநீலம்வயிரமாணிக்கஞ்சோதி
பாவியபவளம்போன்றும்விளங்கினபகரவொண்ணுச்
சுருதிகள்புகழுமேலாஞ்சுயம்புலிங்கங்கள்கோடி. (21)

---

19. இருந்த-வினைமுற்று அன்சாரியை யின்றிவந்தது அம்மா அசை நிலை.

20. நவம்-புதுமை.

வேறு

எவ்வுலகங்களினுமமர்ந்திருந்தபலபலகோடி
யிலிங்கஞ்சூழச்
செவ்விபெறுமவ்விலிங்கத்திடையிருந்தசுவேதலிங்கத்
தினைக்கண்ணுற்றுக்
கவ்வையறுநிட்டைபுரிந்தன்பினுடன்முன்னமது
கருத்திற்கண்ட
வவ்வரியவிலிங்கமன்றோவிவ்விலிங்கமென்றுதன
தகத்தெண்ணி. (22)

கனிவர்க்கமுமலர்வகையுங்கமழ்தருசந்தனமுநறுங்
கலவைச்சாந்து
மினியபரிமளதூபதீபமும்பூசனைக்குரிய
வெவையுங்கொண்டு
நனிசிவராத்திரியிலொருநாற்சாமந்தொறுங்கருவை
நகரின்மேவும்
புனிதசிவலிங்கமதைவிதிமுறைதேர்ந்தன்பினுடன்
பூசித்தானால். (23)

சங்கிருக்குங்குழைப்பெருமான்முதற்புதல்வனிவ்வணம்
பூசனையியற்றி
யிங்கிருக்குமெல்லைதனின்மூவுலகத்துள்தலங்க
ளெங்குந்தான்சென்
றங்கிருக்குந்தலமுழுதுங்கண்டுசிவலிங்கமொன்று
மவண்காணுமற்
கொங்கிருக்குமலர்க்கடம்பன்மீண்டனன்றலத்தி
டையாகுலமுற்றம்மா. (24)

மாமணிலாகுலமுற்றச்சிவராத்திரிநாளின்
மருவுகாலாஞ்
சாமமதிற்றிருக்கருவைத்தலத்திடைவந்தடைந்த
னைத்தலத்தில்லைவங்

22. செவ்வி-அழகு-கவ்வை-துன்பம்
24 குழை-காது கொங்கு மணம் ஆகுலம் வருத்தம்

யேழுறுபல்கோடிவிக்கத்திடையிலங்கும்பால்வண்
ணவிலிங்கந்தன்னைக்.
காமருபூசனையியற்றுமுன்னவனைப்பின்னவன்று
ன்கணனுற்றானே. (25)

வண்டுமுரலகடம்பணிதோட குமரவேளைமுன்னவனை
மகிழ்ச்சிகூர
கண்டுமிகவுயர்ந்தவனைப்பெருமதத்தையுடையனெனக்
கருத்திலெண்ணி [க்
கொண்டுசென்றசொழிந்தயபுரியெனுமத்தலத்தினிடை
குலவிவாழு
மெண்டகுபாலவண்ணலிங்கந்தனைப்பூசித்திடவினை
ச்சதானித்தபத்தமமா (26)

ஆய்ந்தசிவராத்திரியோர்சாமமுளதின்னுமென்னு
மமயந்தன்னில
வாய்ந்தபெருங்குணநிதியாங்கணபதியையன்பொடுமு
ன்வணங்கிப்பூசைச
சேய்ந்தபலவனசப்பொருள்கொண்டிரவியெழுந்திடு
ங்காறுமிருந்ததனாலப்போற்
றேய்ந்தவிடைக்குறமடந்தைசேர்குமரப்பெருமான்பூ
சித்தானமன்னோ. (27)

வேறு

இன்னணங்குமரவேளுங்கயமுகத்தெந்தைதானும்
பன்னருஞ்சிறப்பிற்பூசைபரிவுடனியற்றுங்காலை
யுன்னுமங்கவர்செய்பூசைசகுவந்தருட்குறியினின்று
மின்னவிர்சடிலத்தெம்மான்றோன்றினன்விடையின்மீது. (28)

---

26 முரலல்-ஒலித்தல் எண்ணென்னுமுதனிலை செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சமாய் நின்றது

27 அமயம்-காலம் காறு அளவு

கையின்மான்மழுவுங்காளகண்டமுமொருமுக்கண்ணுஞ்
செய்யவேணியுமெண்டோளுந்திருமுகாம்புயமோரைந்து
மெய்யிலோர்பாகந்தன்னின்மிளிர்பசுங்கொடியுந்தோன்றத்
துய்யநற்புதல்வர்முன்னேதோன்றிநின்றனனன்மாதோ. (29)

மைந்தர்காள்கேண்மின்வேண்டும்வரநமக்களித்துமீங்குச்
சிந்தையினுவந்தோநீவிர்செய்தபூசனைக்கென்றோதத்
தந்திமாமுகத்தெம்மானுந்தனிக்கதிர்வடிவேலேந்துங்
கந்தநாயகனுந்தந்தைகழல்பணிந்தியம்புவாரால். (30)

அத்தனித்தலத்திலெய்தியநற்சிவநதியிற்றூய
சித்தமுற்றிவ்விலிங்கதெரிசனஞ்செய்தோர்யார்க்குஞ்
சுத்தமூவுலகத்துள்ளவியமாலிங்கங்கள்யாவும்
பத்தியிற்றெரிசித்தேதகுபயனெலாந்தருகவென்றார். (31)

வேறு

அந்தவரமவர்க்கருளியெம்பெருமான்பின்னருமங்
கவரின்மூத்த
கந்தமதகயமுகத்தோன்றனைநோக்கிமைந்தவுனைக்
கருதினோர்க்குச்
சிந்துபுடைசூழுலகத்திடைச்சருவகாரியமுஞ்
சித்தியாகுஞ்
சந்ததமாதலினுனக்குச்சித்திவிநாயகனெனும்பேர்
தந்தேமென்றான். (32)

முருகனெனுமிளங்குமரன்முகநோக்கிமகிழ்ந்துலக
மூன்றுஞ்சென்று
கருதரியவவ்வுலகங்களினுளலிங்கங்களெலாங்
கண்டுபோற்றி
வருகுவலோரிரவிலெனமனவீரத்துடனேகி
வந்தவாற்று

---

32 சிந்து-கடல் சந்ததம் எப்போதும்
33 வருகுவல்-உயர்திணையாண்பாலொருமைத்தன்மை யெதிர் காலவினைமுற்று வருவேனென்பது பொருள்.

லொருபெயர்தந்தனம்வீரசன்முகனென்றெனவுரைத்தா
னுவமையில்லான் (33)

எனவுரைத்ததந்தைதனைப்பிறைஞ்சிவடிவேற்குகவே [று
ளிசைப்பாரெனந்தாய்
மனதிடையோரையமெனக்குளதஃதென்னெனின்முன் [ர
னையஞ்சென்றங்
கணமருவுமிலிங்கமொரவறுங்கண்டிலனென்முன் னுதித்தே
ன்கண்டுபூசித
தனனிவன்மாலிங்கமதைப்பூசித்தற்கெவனெனக்குச்
சாற்றுகென்றான். (34)

ஐயமறவிவ்விலிங்கமேகமதுவடிவமென
வறிவுற்றறிந்து
கையனையமையன்போற்பூசித்ததனுவிததலத்தே
றய்யவவனினுமுயர்ந்தோனென்றுசெருக்குற்றதனாற்
றுலங்குமூன்று
வையமேலற்றினுந்தேடிக்கண்டிலையாலேதுவிது
மதலாயென்றான். (35)

திருத்தகுமூவுலகனைத்துந்தேடியுங்காணுமலுளங்
வருத்தமடைந்தமையுணர்ந்துகாட்டினமித்தலத்திடை
யிம்மாலிங்கத்தைக்
கருத்தினைநள்சுரந்துகேணகனவுரைத்தும்பின்னவரா
னாறுகமுறுவானாற
பருத்தவரைச்சிலைப்பெருமான்றனதிருநற்புதல்வ
னையும்பார்த்துமாதோ. (36)

---

34 பூசித்தனன்-உயர்திணையாண்பாலொருமைப்படர்க்கையிறந்தகாலவினைமுற்று பூசித்தானென்பது பொருள்.

கலித்துறை.

செப்மைசேர்தெரிசனமுமக்களித்தனஞ்சிறிது
மும்மைசேர்பவரொருவருமிலையெமையலலான்
மும்மைமாநிலத்திடையெனமொழிந்துருக்காந்தா
னெம்மைநாடொறுமன்பொடுபுரந்தருளிறையோன். (37)

பதிகுமரன் பூசித்தசருக்க

முற்றிற்று.

ஆகச் சருக்கம்-13க்கு-விருத்தம்-441.

எட்டாவது

சிவராத்திரிவிரதவியல்புரைத்தசருக்கம்.

த.- அறுசீர்விருத்தம்.

நற்றவமகலாத்தூயநைமிசாரணியந்தன்னி
லுற்றமாமுனிவர்கேட்பவுயர்சிவநிசியின்மேன்மைப்
பெற்றிகளனைத்துமந்தப்பெரும்புகழ்க்கலைகள்யாவுங்
கற்றுணர்சூதன்சொன்னகதைசிறிதெடுத்துச்சொல்வாம். (1)

கலிவிருத்தம்.

சீதமாருவரிசூழ்செகமெலாம்புகழ்தருஞ்
சூதமாமுனிபதந்தொழுதுமாபதியெனு
நாதன்மேலன்பறுநைமிசாரணியம்வாழ்
வேதமாதவரெலாம்வினவுவாரொன்றரோ. (2)

சீலமேபெறுதிருச்சிவவிராவிரதமே
மேலதாந்தூயமாவிரதம்யாவற்றினுந்
தாலமீதென்றநீசாற்றினுய்மேலதென்
றேலவேபகருதற்கேதுவென்னென்றனர். (3)

ஏதுவென்னென்றமாமுனிவருக்கினிதுவந்
தோதுவன்சூதன்முன்னொருதினந்தனினறுந்

தாதுறந்துளவனுஞ்சதுமறைக்கிழவனுங்
காதுவெம்போர்செய்தார்கருவமேலீட்டினார். (4)

விண்ணுளோர்யாவரும்வெருவுறக்கொடியபோர்
பண்ணுமவ்வேலையிற்பைங்களாநீழல்வா
முண்ணலங்கவர்செருக்கினையடக்குதுமெனு
வெண்ணினன்றனதுநற்றிருவுளத்திடையரோ. (5)

எம்பிரானவ்விலிங்கத்தினின்றெரியழற்
றம்பமாய்நின்றனன்சாருமோர்நாளிடைக்
கும்புடன்றோன்றுபல்கோடிசூரியரெனப்
பம்புசெஞ்சோதியெவ்வுலகமும்பரவவே. (6)

அறுசீர்விருத்தம்.

கடிகமழும்பசுந்துளவத்திருமாலுமலரயனுங்
கண்ணுற்றாங்கே
யடிமுடிதேடினர்காணாதுளமயர்வுற்றிருந்தனரா
லந்தவேலை
பொடியணியுந்திருமேனிப்புனிதனவர்க்கெதிரிலமை
யோர்புடைசூழ்ந்தேத்த
நெடியதிருவருள்சுரந்துசுயவடிவதனொடுதோன்றி
நின்றானமன்றே. (7)

நின்றதனிப்பரம்பொருளவ்விருவரையன்பொடுநோக்கி
நீர்தாமீங்கே
யின்றுதுயிலுணவுதவிர்ந்தெமதுதெரிசனம்பெறலா
லிற்றைநாட்பேர்
நன்றிபெறுசிவநிசியாமித்தினத்தின்மாவிரத
நயந்தோர்யாரு
மொன்றுவரெப்பாவமுந்தீர்ந்துயர்வுறுசாயுச்சியமென்
றுரைசெய்தானால். (8)

---

5. எனு-செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம் என்று என்பது பொருள்.

ஆதலினலிச்சிவராத்திரிவிரதமிகசசிறந்த
தனைததிலுள்ளு
மாதவததீரிவ்விரதந்தனையனுட்டிததிடுமியலபும்
வழுத்தக்கேண்மி
னேதுமுதனளடிசிலொருவேளையருநதிமன
வொருமையுற்றுத
நீதிலசிவராததிரியாமததினததிலிரவியெழுந
திடுமுன்மாதோ. (9)

பததியுடனேயெழுநதாகமவிதியினபடிநதியிற
படிநதுமேலாஞ்
சுததிகொள்வெண்பொடிதிரிபுணடரமாகததரிததுமிகத
துலங்குமெய்யிற்
சிததியளிததிடுமுருததிராககமணிநதுணவொடுசித
திரையகற்றி
யததினமற்புதமூலமானசிவலிஙகமதையா
தன்மாதோ. (10)

புற்றுமண்சோமயமுதலாகியவிலிஙககளையாதல
பூசிததேயன
புறறபிடேகமபுரிநதுகுஙகுமஞ்சநதனங்களப
மொளிருநதூய
நற்றனிமாமலர்கனி ணறுநதூபதீப முத
னவிலததக்க
மற்றெலவுபுவகொடுசதுர்சசாமநதொறும்பூசிததிடுக
மகிழ்ந்துமன்னே. (11)

வருமறுநாடனிலருணோதயகாலமபுனலபடிந்து
மறுததீர்ததய

9. அடிசில்-சோறு.
11. கொண்டென்பது-கொடுவெனநின்றது செய்யுள் விகாரம்.

கருமவனுட்டானமுடித்துன்னுமாதந்தொறுமுட்
கனிந்திவ்வண்ணந்
தருபுனிதவபரபக்கச்சதுர்த்தசியிற்செயும்விரதந்
தனையிப்பாரிற்
பொருவருங்கேவலசிவராத்திரியெனத்தேர்ந்திடுபெரி
யோர்புகலுவாரால். (12)

மதிதொறுமிவ்விரதமனுட்டித்தலரிதெனிலோர்
வருடந்தன்னிற்
றுதிமருவுகும்பமாசியபரபக்கச்சதுர்த்தசியிற்
கூறுமிந்த
விதிபெறுநல்விரதமனுட்டித்தலால்வேண்டுமிந்த
விரதந்தன்னை
யெதிருமகாசிவராத்திரிவிரதமெனப்புவியி
லிசைப்பர்மேலோர். (13

வேறு

செப்புசிவராத்திரிவிரதஞ்சிரத்தையொடு
வற்சரந்தோறு
மிப்புவியின்மீதனுட்டிப்போரெல்லாவிரதப்
பலனுமுற்றுத்
தப்பின்மனததாளினைத்தவெல்லாந்தாமேயெய்தி
மறுமைதனி
லொப்பில்சிவசாயுச்சியமென்றுரைக்கும்பதமும்
பெறுவாரால். (14)

உவரார்கலிசூழ்புவியின்மிசையுயர்வானுலகத்
திமையவராற்
றவராற்புகழுமிவ்விரதந்தன்னையனுட்டித்
திடுதலின்றிச்

14. வற்சரம்-வருடம்.

சிவராத்திரியென்றுரைத்திடுமித்தினத்திலனத்தைப்
புசிப்பவர்தா
மெவராயினுமற்றவரோநாயிறைச்சிதனையுண
டவராவார். (15)

கலித்துறை

சிறப்புறுஞ்சிவநிசியெனுநதினத்தின்மாவிரத
மறப்பிலாமலன்புடனனுட்டித்திடுமாட்சி
யுறப்பெறுதவர்பிறப்புநீளுலகிடையெநதப்
பிறப்பினுமடையபிறப்பெனப்பேசுவர்பெரியோர். (16)

சிவராத்திரிவிரதவியல்புரைத்த சருக்கம்.

முற்றிற்று.

ஆகச் சருக்கம்-14-க்கு-விருத்தம்-457.

ஒன்பதாவது

## பஞ்சலிங்கதெரிசனம்பெற்ற சருக்கம்.

௧.—கலிவிருத்தம்

நற்றுழாயணிநாதனும்வேதனுங்
கற்றைவார்சடையீசன்கருணையா
லுற்றபஞ்சலிங்கத்தையுணர்ந்திடப்
பெற்றதோர்கதைபேசுதுமியாமரோ. (1)

வேறு

முன்னையொருநாளதனின்முண்டகநறும்பூ
வுந்தியிடைவந்துலகம்யாவையுமொருங்கே
தந்தபிரமன்றனியிருந்துநனிதானே
சிந்தையறவொன்றுணர்வினைந்தனன்வியந்தே. (2)

பங்கமறுமிப்புவிபடைக்குமுனிருந்த
தெங்கெவணிருந்துபினர்வந்ததிதுவென்று

சங்கையுறுநெஞ்சமொடுசோர்ந்தனனறம்பூ
மங்கைபுணர்செங்கணெடுமாதவனிடத்தே. (3)

காமருபயோததியிடைப்பருவகால
மாமுகில்படிந்ததுகிடந்ததெனவைகித்
தாமரைநெடுங்கண்வளர்கின்றபுனிதன்றன்
மாமலரடித்துணைவணங்கியுரைசெய்வான். (4)

எண்சீர்விருத்தம்.

சுநித்ததிரைப்பாற்கடலியாவுமோர்ந்து
கண்வளரும்பெருங்கருணைக்கடலேயிஞ்ஞான்
றநித்தனெனுளத்தினிடையைபமொன்றென்
னுளத்துறுமவ்வையமகற்றியொழிக்கும்வண்ண
மதித்துனதுசன்னிதிவந்தடைந்தேனிந்த
வையகமெவ்விடத்திருந்துவந்ததான்முன்
விதித்தவரைதிருந்ததுதானெங்குநன்கு
விளங்கவெனக்கருள்புரிதல்வேண்டுமென்றான். (5)

கலிப்பா

மெய்யுற்றவேதன்விளம்புமொழிதான்கேட்டு
மையுற்றமேனியுடைமாதவனப்போதுநின்போ
லையுற்றநெஞ்சேனநிங்கிலேன்யானுமினிப்
பையுற்றபூணணிந்தோன்பாலுற்றறிடுதுமென்றான். (6)

கன்றால்விளவின்கனியுகுத்தமாயவனுங்
குன்றுமணங்கமழ்செங்கோகனகப்புத்தேளுஞ்
சென்றொருகால்வருக்குமதேசித்திடுவா
னன்றுவீற்றிருந்தோனமர்காயிலைநோக்கியரோ. (7)

பொங்குபுகழ்விண்ணோர்புடைசூழ்ந்தினிதிறைஞ்ச
விங்கிதயாழ்வல்லோரிசைத்தேன்செவிமடுப்பப்

3. சங்கை-சந்தேகம்.

4. காமர்-அழகு. சாரியையிடைச்சொல்-பயோததி பாற்கடல் முகில்மேகம்.

பங்கமீறவெவ்வுலகுமீன் றபசுங்கொடியோ
டங்கயிலைவீற்றிருந்தவண்ணலைக்கண் ணுற்றனரால். (8)

போற்றினார்சென்னிபுனைந்தாரடிமலரை
யேற்றினான்பைத்தமதுபானதெண்ணமதைச்
சாற்றினான்னோர்தமைநோக்கிநுங்கருத்தைத்
தேற்றுவாம்பின்னரொன்றுசேண்மினெனச்செப்புவனால்.

சித்துருவமாபுரமென்றோதுந்திருத்தலத்திற்
பத்தியுடனெய்திப்பசுபபூங்களாவனம்வாழ்
விதகரமாலிங்கமதைவேண்டியிரப்பூசைபுரிந்
தத்தலநீருற்றிடுமின்சின்னாளெனவறைந்தான். (10)

அறுசீர்விருத்தம்.

சிந்தையினுவகைகூர்ந்துதிருநெடுஞ்செங்கண்மாலுங்
கந்தமார்செய்யபூம்பங்கயத்தவிசுறைபுந்தேவு
மந்தமாதலத்திலெய்தியருட்சிவலிங்கந்தன்னைப்
புந்தியன்பொடுபூசித்துப்போற்றியங்கிருந்தார்சின்னாள். (11)

தேன்றிகழ்மலர்ப்பூஞ்சோலைச்சித்துருநகரத்தன்னோ
ரேன்றபத்தியினாற்பூசித்தினனமிருக்குங்காலை
யான்றமூவுலகுமீன்றவதுலசுந்தரியினோடு
தோன்றினனவர்முன்னந்தச்சோதிலிங்கத்தினின்றே. (12)

கலிவிருத்தம்.

பாடினார்நற்பரவசமாகநின்
றாடினார்மனத்தன்பிற்புளகமெயம்
மூடினாரிருமுண்டகத்தாள்சிரஞ்
சூடினார்மெய்த்துதிபுரிந்தாரரோ. (13)

பூங்களாநிழற்புங்கவனப்பொழு
தோங்குமிப்புலிக்கோர்முதலாகிய
பாங்குசேர்திருப்பஞ்சலிங்கங்களை
யாங்கவர்க்குமெய்யன்புடன்காட்டுவோன். (14)

அறுசீர்விருத்தம்.

மருவுதென்றிசையிற்புன்னைவனத்துறுமிவ்விலிங்கம்
பிருதிவிலிங்கமப்பிலிங்கமாமம்பிரவனத்து
ணிருதிதிக்குறுமிலிங்கநிகரிலாத்தேயுலிங்கங்
கருதரும்புகழ்சேர்ந்தக்களாவனத்துறுமிலிங்கம். (15)

வாயுவின்றிசையில்வில்வவனத்துறுமிவ்விலிங்க
மேயுறற்புகழ்கூர்வாயுலிங்கமாத்தாருதிநத்
தூயசீர்வாயுதிக்கிற்றோன்றுமிப்பலாசக்கானி
ளேயமுற்றுறைமிலிங்கநிகரிலாகாயலிங்கம் (16)

காதலிற்காண்மினென்றுகாட்டினனுமைப்பாகனந்த
மேதகுபஞ்சபூதலிங்கமாயவையாவையாலா
மாதியிற்றோன்றுமிந்தவைந்திலிங்கத்தினிறங்
கோதியவிவற்றினுள்ளேயொவ்வொன்றுபற்றதந்நிலமாமேதா. (17)

செப்புமற்றையலிங்கங்கள்சித்துருவானவிந்த
வொப்பறுசோதிலிங்கத்தனிலுதித்தனவொடுங்குந்
தப்பறுமுதலீற்றிற்சார்ந்துமிவ்விலிங்கந்தானே
யெப்புவிகளுக்குமூலமெனவுணர்ந்திடுகமாதோ. (18)

என்றுதானெம்மான்கூறவிருவருந்தமதுநெஞ்சத்
தொன்றியேயெழுந்துபொங்குமுவகையங்கடலுண்மூழ்கி
மன்றவக்கடவுட்காங்கேசார்தருகுணங்காணார்வாசக்
கொன்றையஞ்சடையான்பொற்றாள்பணிந்திதுகூறலுற்றார். ()

காதலித்தலத்திற்போந்துநாமிருந்தவமீங்கு
மேதகுஞானம்பெற்றேமிவ்வளப்பதற்கரியபொல்லாப்
பாதகரொனினுமிந்தப்பதியிடையடைந்தோர்யாருங்
கோதறுஞானமெய்தத்திருவருள்கொடுத்தியென்றார். (20)

---

15. ஆம்பிரவனம-மாவனம்.
19. மன்ற-தேற்றப்பொருளுணர்த்திநின்ற தோரிடைச்சொல்.

இரந்தவன்னவருக்கந்தவரமதையினிதநல்கிக்
காந்தனவிருந்தானந்தக்கருணைமாவிலிங்கந்தன்னு
ணிரந்தரமடியார்தங்கணெஞ்சிடைவைகியன்ன
ரரந்தைகோயகற்றிக்காக்குமதுலசுந்தரியோடம்மா. (21)

எண்சீர்விருத்தம்.

தக்கபெருந்தவமுடையீருரைத்துமின்னுந
தனிக்களாவனப்பெருமான்சரிதங்கேண்மின்
றெக்கணதிக்கினிலரையோசனைத்தூரத்திற
றிகழ்நாகசுனையெனுநற்றீர்த்தமேவு
மிக்கசெழுமபுன்னைவனத்திடைமாலோடு
விளங்குருவங்தெரிசிப்பான்விரும்பிமுன்னாண்
முக்கணுமையவண்முனிவர்சங்கபதமர்
முதியவருந்தவமதனைமுயலுநாளில். (22)

அங்கவர்செய்பெருந்தவத்துசகிரங்கியேதா
னருமைபெறுதனதுதிருவுருவந்தன்னிற்
செங்கமலவிழித்திருமால்வடிவங்காட்டிச்
சிந்தையுவந்திடக்கருணைசிறப்பநல்கிப்
பங்கமில்கோமதியெனும்பேர்படைத்துமேவும்
பசுங்கொடியினொடுகருவைப்பதிப்பால்வண்ணன்
சங்கரநாரணனெனும்பேரதனைப்பூண்டு
தனிப்பிருதிவிலிங்கமெனத்தானுற்றானல். (23)

திருவுலவுமித்தலத்தினிருதிதிக்கிற்
சிவகங்கையென்னுமொருதீர்த்தத்தோடு
மருவுமுக்கால்யோசனைத்தூரத்திற்சூத
வனமெனுமோர்தலமுளதம்மாதலத்திற்

21. நிரந்தரம் எப்போதும்-அரந்தை துன்பம்.
22. உரைத்தும்-சொல்வோம் தம்விகுதியெதிர்காலங்காட்டி
ன்றது.
24. சூதவனம்-மாவனம்.

பொருவறுசோலன்வளவன்வழுதியென்னும்
புகழ்பெறுமூவேந்தருமோர்போது தங்கள்
பெருவளநாட்டெல்லைகாரணமதாகப்
பெருஞ்சமரம்புரியநினைந் திடுமங்காளில். (24)

அவ்வரசர்தமக்குநடுநிலைமைதானுற்
றருளுடனவ்வெல்லைவழக்கதுதீர்த்தன்னோர்
வெவ்வியதோரிகலகற்றிப்புரந்தவாற்றன்
மேன்மையுறுமத்தியத்தனெனும்பேர்பெற்றுச்
செவ்விதிகழகிலாண்டேசுவரியென்னுந்
திருநாமம்படைத்தபராதேவிதன்னோ
டெவ்வுலகும்புகழ்தருமப்பிலிங்கமாக
விருந்தனன்பல்வரமடியார்க்கீந்துமாதோ. (25)

இலகுபெரும்புகழ்பரவுமவாயுத்திக்கி
லின்பமுறுமோரைந்துகுரோசந்தன்னில
விலகருஞ்சீர்வில்வவனமென்றுகூறும்
விசேடதலமொன்றுளதால்விளங்குமந்த
தலமதின்முப்புரவசுரர்தம்மைவென்று
தங்குமயர்வறவாயுலிங்கமாக
வுலவுதிரிபுரத்தீசனெனும்பேர்பெற்
றுவந்திருந்தான்சிவபரிபூரணியோடம்மா. (26)

சீருறும்வானவருமுனிவரும்பலகோடி
சித்தரும்வந்தனுதினம்பூசித்துப்போற்றும்
பேருளவவ்வில்வவனத்தலத்தின்வாயுப்
பெருந்திசையிலோரைந்துகுரோசந்தன்னிற்
கோரைநதிதேவிநதியெனப்பேர்வாய்ந்து
குலவுமிருநதிநடுவிற்குறைதீர்மேன்மை

---

26. குரோசம் கூப்பிடுதூரம் ஆல்-அம்மா இரண்டும் அசைநிலை யிடைச்சொற்கள்.

சாருமெழிற்பலசவணமென்றுக்தேவ
தானமென்றுக்கூறுகின்றதலமொன்றுண்டால். (27)

தேவியுமைபண்டொருநாட்டன்னைநோக்கிச்
செய்த்தவத்தினுக்குவாஞ்சிறப்பால்கிக்
காவிரிகன்றுடனுயர்வழுதியாவி
கவரும்வகையுய்த்தவிடக்கலையைநீக்கி
மாவியனச்சாடைதவிர்த்தவனென்றோது
மாண்புறுபேர்தரித்துவெளிபிலிங்கமாகத்
தாவில்புகழ்மேவுதவம்பெற்றோனுங்
தையலுடனிருந்தனனத்தலத்தின்மாதோ. (28)

கிருபைநதிமுதலியபன்மூன்றுதீர்த்தக்
கிளர்பெருமைவாய்ந்துவிராட்டினுக்குமேன்மை
மருவுசுழிமுனைத்தானமாகியோங்கு
மகிமைபெறுமிக்கருவைத்தலத்திலென்றும
பொருவறுமொப்பனையெனுமம்பிகையினோடு
புவியனைத்தும்புகழ்சீதாபுவிலிங்கமாகத்
திருவடிவந்தனைக்கொடுவீற்றிருந்தானெம்மான்
சீர்த்தியுரைத்திடவல்லார்செகத்தில்யாரோ. (29)

பஞ்சலிங்கதெரிசனம்பெற்றசருக்கம்.

முற்றிற்று.

ஆகச் சருக்கம் 15-க்கு விருத்தம்-486.

---

28. விடம்-நஞ்சு கலை ஆடை நஞ்சு ஆடை நச்சாடையென நின்றது.

பத்தாவது

## பாலவண்ணர் திருநாமமுண்டான சருக்கம்—தி,

அகவல் விருத்தம்.

கருப்புவின்மதனைக்காய்ந்தகண் ணுதற்பெருமான்றன்னை
விருப்புடன்பரவியேத்தும்வியன்கவிக்காகமுன்னாள்
மருப்பொலிகளாவனத்தில்வயங்குபாலவண்ணனென்னுந்
திருப்பெயர்படைத்தகாதைதெரிந்தவாறெடுத்துச்சொல்வாம்

காதலிற்சுரநம்யா முவ நடலைகடைந்ததனிற்றோன்றுங்
கோதறுமமுதெமக்குத்கொடுத்திலர்தாமேயுண்டு
மாதிரத்திமையோர்நம்மைவஞ்சித்தாரெனவன்றோர்பான்
மோதமர்புரிவான்சென்றார் மா ஞுடையவுணரெல்லாம். (2)

சென்றுபலகாலம்வெம்போர்செயதனரிமையோர்தம்மை
வென்றிலர்சமருஞ்செய்துபாயபின்னதனையேயன்றிக்
கன்றியமனத்தராகிக்கடவுளர்தம்மைவெல்வா
ரொன்றியவுபாயம்யாதெனவுளத்திடைநினைத்தார்மன்னோ ()

ஓங்குநங்குரவன்றனபா லுற்றுநாமுரைத்துமென்னி
னீங்குநங்குலைறயீதல்லானினைவுவேறிலையென்றுன்னி
யாங்குநற்புகர்பாலெய்தியவனடிககமலஞ்சென்னி
தாங்கினருரைக்கலுற்றார் தமமனக்கருதலைதமாதோ. (4)

எம்மைவஞ்சித்துமுன்னமின்னமுதுண்டவாற்று
லம்மவென்றனரவ்வானோர்தோற்றனமவர்க்குநாமால்
வெம்மைசேர்சமரிலக்தப்பகைஞராய்மேவும்விண்ணோர்
தம்மையாம்வெல்வானையதண்ணருள்புரிதியென்றார். (5)

அங்கவர்தம்மைநோக்கியறைகுவன்றவத்தினலோர்
பொங்குபாற்றடமமைத்துமக்கப்பால்பொருந்தவூட்டித்
துங்கவெஞ்சமரிலந்தச்சுடர்முடியிமையோராற்றல்
சிங்கவுற்றழியும்வண்ணந்திறனுமக்களித்தும்யாமால். (6)

---

6. ஆற்றல்-வலிமை. சிங்கல்-கெடுதல். அளித்தும்-கொடுப்போம்.

திடமொடுநீவிர்சென் றுதிருத்தவம்புரிதற்கேற்ற
விடமதுநோக்கிவமயினெனவுரைதந்திடலுமன்றோர்
புடவியெங்கணுமேதேடிப்பொருந்துறுமிடமீதேயென்
றடர்களாவனத்தைநோக்கியாங்குவந்துரைத்தார்மன்னோ. (7)

தள்ளருந்திறல்கூர்வெய்யதானவருரைக்கக்கேளா
வுள்ளுவந்தவரோடந்தவுபர்களாவனத்தையெய்தி
யொள்ளியகருணைச்சோதிப்பிலிங்கதநின்முன்னருற்று
வெள்ளிசெய்தனனுற்பன்னுண்மிக்கநற்றவந்தான்மாதோ. (8)

வேறு

கொடியபெருந்திறன்மருவுமவுணர்திருமுடியின்மிசைக்
கொள்ளுஞ்செய்ய
கடிகமழ்பங்கயசரணக்குரவனெனப்புகழ்பெறுமக்
கவிதான்செய்யு
நெடியபெருந்தவமதனுன் மகிழ்வுறவந்துதித்ததவ
ணிகரின்மேன்மைப்
படிபுகழும்படிகிரணம்படிபுமணிப்படிபுடனோர்
பாற்றடாகம். (9)

சாற்றுறுமவ்வேலைமகபதிமுதல்வானவர்முன்னந்
தமக்குப்போரிற்
றோற்றதயித்தியரமரிற்சயம்பெறுவான் றவம்புரிந்து
துலங்கவாங்குப்
பாற்றடமொன் றமைத்தனனவ்வவுணர்குருவெனக்
கடல்சூழ்பாரில்யாரும்
போற்றுதவமுனிவரெலாம்புகழ்தருநாரதமுனிவன்
புகலக்கேட்டார். (10)

அடலுறுமவ்வவுணர்குருவரியபெருந்தவமியற்றி
யதனால்வந்த

8. கவி-சுக்கன். புகர்-சுக்கிரன். குரவன்-ஆசான்.

தடமதனினிறைந்தபயந்தனையவுணர்றாகர்வரெனிற்
சமரஞ்செய்வான்
றிடமொடுவெந்திடுவரவர்தமையாம்வென்றிடலரிதென்
செய்வேமென்று
கடவுளர்யாவருமனதிற்கவலைகனியவடைந்து
திருக்கயிலைபுக்கார் (11)

பயிலுமொருநான்மறையங்காணரியமங்கைமகிழப்
படைத்தலை
மயிலொடுபொன்மலைபொருவெனமலையினமிசை
யிருந்ததெனமாலில்லாவோர்
கயிலைதனில்வீற்றிருந்தகனிப்பொருளையுளத்தொடு
கண்களிப்பக்கண்டு
வெயிலவிர்பொன்முடிமிசையவ்விறைவனடித்துணை
மலரைவிரும்பிச்சூடி (12)

படர்திரைவாரிதிவிடமுண்டமைப்புரந்தவாரமுதே
பன்னூலாறு
தொடர்வரியதனிப்பொருளேசுகநிலையேகுணமலையே
தொண்டர்யாரு
மிடரெனுமக்கடலில்விழாதெடுத்தாண்டவருட்கடலே
யெனறநீங்கா
வடர்பவநோயினையகற்றுமருமருந்தேயெனத்துதி
செய்தனரவர்யாதோ (13)

கலிப்பா

தூயதவஞ்செய்துபுகழ்தோற்றுவித்தான்பாற்றடமொன்
றுபதடத்தின்பாலருந்துவரேல்வாளவுணர்
தீயசமராற்றிச்செகுப்பரெமைக்கருணை
நாயகவுன்றனேசரணமெனநாமடைந்தேம் (14)

11. புக்கார்-என்பதன் முதனிலை விகாரப்பட்டு இறந்தகால முணர்த்திநின்றது புகுந்தாரென்பது பொருள்-பயம்-பால்

என்றமரர்கூறவிறையோனதுகேளாக்
குன்றனையதிண்டோளவுணர்கொடுஞ்சமரால்
வன்றுயரெய்தாமேபுரத்தும்யாமவானவர்காள்
சென்றிடுமினும்முலகென்றெமபெருமான்செப்பினன் (15)

எம்பெருமான்சொனமொழிகேட்டிதயமகிழ்ந்
தும்பர்செழும்பொன்னுடைநாடுவந்ததன்பின்
னம்புயிமையோர்தங்குறைமுடிப்பானங்கையமர்
செம்பவளமெய்யானிணைத்தான்றிருவுளத்தில் (16)

பத்தர்பணிந்தேத்தும்பசுபதிங்களாவனு
சுத்தமுறுஞ்சோதிச்சுயம்பமருட்குறிநின
றுத்தமஞ்சேர்திவ்யவொருபுருடனபோலெழுந்து
புத்தமுதவாவியிடையேபுகுந்தனனால் (17)

அங்கதனிற்றோய்ந்தெழுந்தானவ்வேலையெம்பெருமான்
பங்கமிலாமேனிவிளங்கியகாற்பான்மையமாய்த்
துங்கமுறுமத்தீஞ்சுவைபபாற்றடமதுதான
றங்குமொருநன்னீர்த்தடமாயிருந்ததுமேவ (18)

தெள்ளுதிரைப்பாற்கடலின்முனனோர்தினமதனி
லொள்ளியவெண்டிங்களுதித்தங்கெழுந்ததுபோற்
றள்ளரியமேன்மைத்தடத்தினிடைத்தானமூழ்கி
வெண்ணிலவடிவத்தோடெழுந்தாவ்வெளிப்படலும் (19)

கலிவிருத்தம்.

சீர்த்தவத்தால்வருசிறந்தபாற்றட
நீர்த்தடமானதுநிகரில்பாவினுற்
போர்த்தமெய்யுடனொருபுருடனிற்பதும்
பார்த்தனன்சுக்கனோர்பார்வையாலரோ (20)

நோக்கியப்புருடனைநொய்தினிங்ஙன
மாக்கினனிங்கிவனெவிசென்றிடத்

தாக்குறுமிவனை யாமென வுறுதன் மனத்
தூக்கினனெழுந்தனனோடினனரோ (21)

தாங்கருஞ்சினத்துடன் றன்னைத்தாக்குவா
னாங்குவந்திடுமவனகன்றியோடல்போற்
றீங்கலப்புநடனுஞ்சிரித்துவேகமா
யோங்குமக்களாவனநோக்கியோடினன் (22)

ஈடினன்மறைப்பிரானிங்ஙனோடலு
மோடினன்பின்றொடர்ந்துசனனைக்கண்டிலன்
றேடினனெங்குமவன்சென்றுளானென
வாடினனக்களாவனத்தினிறம்பரா (23)

அக்களாவனத்திடைப்பிலனரன்னவன்
றெக்கவெண்கலமதிர்கருஞ்சோதிகூர்
மிக்கநலவடிவொடுவிளங்கித்தோன்றுறு
தக்கவோருருத்தறிதனைக்கண்டானரோ (24)

ஆசிரிய விருத்தம்.

வாய்ந்ததவத்தால்வருபாற்றடமதனி
லொருபுநடனவந்துபுகுதத்
தோய்ந்தனனபாலவடிவமுடனெழுந்து
களாவனம்புகுந்தான்றொடர்ந்துந்தோன்று
தேய்ந்தவனத்திடைமறைந்தானபானிறமு
ற்றருட்குறியொன்றிருந்ததிங்கே
பாய்ந்தபுனற்றடமாயிற்றத்தடங்கா
ரணமெவனெனவுறையுநருளல (25)

இங்கிதனைநிட்டைபுரிந்தறிதுமெனக்
கருதியஃதியற்றுங்காலைப்
பொங்குதிறற்புருடனெனப்போந்துபாற்றட
த்தினிடைபுகுந்துவாவி

---

23. ஈடு-உவமை, உசனன்-சுக்கிரன், அரோ-அசைநிலை

தங்குபயங்கவர்ந்துகளாவனத்திடையி
வ்வருட்குறியாய்ச்சயிலப்பாவை
பங்குறுமெம்பெருமானேயிருந்தனனென்
றறிந்தனனப்பளிங்குமாதோ (26)

கலிவிருத்தம்.

இனிதங்குணர்வுற்றவனெய்தியவோர்
புனிதமபெறுமற்புதலிங்கமதைப்
பனிதங்கியபன்மலர்கொண்டுபெருந்
தனியன்பொடுபூசனைசெய்தனனால் (27)

இயல்போடுதனிக்கவியிங்ஙனமங்
குயர்பூசையுளுற்றியபோதொருநா
ளயன்மாலறியாதவெமானவன்முன்
சயமாவடிவத்தொடுதோன்றினனே (28)

ளங்குந்திகழும்பிறைதோன்றலுமே
பொங்குந்தனியன்பொடுகண்டிமையோர்
பங்கன்பதபங்கயமாமலரைச்
சங்கன்பரவித்துதிசெய்தனனே. (29)

துனிதீரருமைச்சுருதிப்பொருளே
கனியேயமுதேகருணைக்கடலே
பனிமால்வரையீன்றபசுங்கொடிசேர்
தனிமாமுதலேசரணஞ்சரணம் (30)

கொலைவாரணமாவுரியாய்குளிர்வெண்
கலைவாண்மதிசேர்சடையாய்கனமா
மலைவார்சிலையாய்வரதாவிமையோர்
தலைவாவெலையான்சரணஞ்சரணம் (31)

---

26. பளிங்கு-சுக்கிரன்
29. தனி ஒப்பின்மை

முன்னுலகம்பெறலவேண்டுமித்தடத்திற்படிந்தவரென்
றுரைக்கத்தந்தே
முன்னியவிவ்வரமுனகடிகன் றுளமகிழ்ந்துசொலி
மறைந்தான முதலிறிலலான் (36)

கறையுறுவாளவுணரைபபாதலததிடைபபோய்ச
சேர்பிமெனகககழறிசகுகக
துறையுமிடனுசேர்நதனனுமுனிவராகாளநதலததி
னுறுநாறபானு
மறைதருமைங்குரோசவரையுளபுனல்புணணியதீர்தத
மாகுமெனனிற
குறைதவிரசசுககிரதீாததபபெருமைதனையெடுததுக
கேன

பாலவணணாதிருநாமமுண்டான சருககம.

முற்றிறறு.

ஆககசருககம-17-ககு-விருததம-524.

---

பதினொன்றாவது

நாரதகாளாயபாவந்தீர்த்த சருக்கம்.

---

வி—கலிவிருத்தம்.

காவணமபெறுதிருக்கருவைமாநகர்த்
தேவனாதபபெயர்முனியைச்சேர்மிகு
தாவில்காளாயனைச்சார்நதவோர்பெரும
பாவநீக்கியகதைபகருவாமரோ (1)

---

36. முன்னிய—நினைத்த—சொல்லியெனபது சொலியென
நின்றது இடைக்குறை விகாரம-தடம்-தடாகம

37. குரோசம்-கூப்பிடுதூரம்-வரை-அளவு-எ-அசைநிலை

தன்னைநங்கொடைப்புனைசாத்தன்பூரணைப்
பெண்ணுடன்புட்கலைமேவும்பெற்றியான்
விண்ணின்மேற்கிளர்தருவெள்ளிவெற்பினின்
றெண்ணுதெக்கணத்திசைநோக்கியேயரோ (2)

இலகுவெண்கரியின்மேலேறிச்சேனையுந்
தலைவன்காளாயனுஞ்சார்ந்துபோந்திடக்
குலவியேசெல்லுமப்போதுகோதிலா
நலமுறுநாரதமுனிவனண்ணினான் (3)

அரிகரபுத்திரனங்கைநீட்டியே
பரிவுடனுசிதானபண்ணலுமம்பிக
வெரியெழநோக்கியேயம்முனியொரு
பெரியவனைப்போறகைநீட்டிப்பேசினான் (4)

கஞ்சன்மாமகனெனக்கண்டுசெற்றுநீ
யஞ்சினாயிலைமனத்தகந்தையுற்றுளாய்
கொஞ்சமேகூறினாய்கூறுவேனரு
சஞ்சரிதநுருவெனச்சாபமிட்டனன் (5)

ஞானமாமுனிவரனின்றகாலையிற்
சேனைகாவலன்மிகுசீற்றத்தோடுநீ
தானுரைசெய்யுமிச்சாபநன்றுவெங்
கானகவாழ்வில்யானைகருத்துளேமென (6)

வித்தகமுனிவனைவெகுண்டுதண்டுணிப்
பித்தர்கலகத்திற்பிரியனாகியே
பெத்தலத்தினுமுனையிகழ்ந்துகூறவென்
றய்த்தவனகதையினாலுந்திவீசினான் (7)

---

3. வெண்கரி-வெள்ளையானை
4. எரி அக்கினி-கஞ்சன்-பிரமன் ஆசி-ஆசிர்வாதம்
7. கதை-தண்டு-கூற வென்பதனிறுதியகரம் வியங்கோட் பொருளுணர்த்தி நின்றது

எளியகதைநவின்றவேதத்திறனெலாழுக்
தாவெனவபயமென்றலறிவாய்வெரீஇ
மூவிழிக்கடவுண்முன்முறையிட்டோதிட
மேவினன்கயிலையில்விதியின்கொட்பினால் (8)

அண்ணறன்றிருமுனமடைந்துநாரதன்
கண்ணினீர்மல்கமெய்கலங்கியெம்பிரான்
றண்ணுறுந்தாமரைத்தாளில்வீழ்ந்தனு
முண்ணெகிழ்ந்திதன்கொலென்றேதவோதினன் (9)

இருநிலநீங்கியானிறைவநின்பதத்
தெரிசனைக்கெழுந்திவண்சேருங்காலையில்
விரிகடறபெரும்படையோடுமேவியே
வருகின்றான்கடனிறவையனவவயின (10)

நாணுபசாரநன்மொழிநவிற்றலுந்
தானுரைத்திலனென்றன்றனைகாவல
னேனெனையஞ்சலிசெய்திடாதனென்
றானமில்கதையினனுயரவிசினன் (11)

வன்றிறலுடையகாளாயன்வன்பினாற்
கொன்றிடக்கருதியேகொடியதண்டினு
னின்றெறிதலும்புகலின்றியெந்தையே
யுன்றிருவுளத்தினுய்ந்துபோந்தனன் (12)

என்னலுமிறையவன்வெகுளியெய்தியே
நன்னெறிநந்தியைநோக்கிநம்வயி
னன்னகாளாயனையழையென்றோதலு
மின்னறீர்நந்தியும்விரைவினெய்தியே (18)

வம்பினையுடையகாளாயவாவனை
யெம்பிரானழைத்தனனெனவியப்பலுங்

9. மல்க-நிறைய
10. வயின் இடம்

கம்பிதத்தொடுமவன்கடிதினெய்தவே
நமபிரான்செயலென்றேவெனறசாத்தனும் (14)

ஏகினன்கயிலையிலிறைவனையாற்
சேகறுமனத்தன்காளாயன்சென்றுதா
ளாகுலத்தொடுமலரடியில்வீழ்தலும
வேகியாயவன்றனைவிமலனோக்கயே (15)

விஞ்சைமாமுனிவரனிநமபியன்னையே
யஞ்சலிசெய்திலனென்றவன்றனை
யுஞ்சிடாவண்ணமேயுனைத்தண்டினூ
லெஞ்சலுற்றிடவெடுத்தெறிந்தசென்னென்றான் (16)

அக்கணந்தன்னிற்காளாயனப்போற்றியே
தெக்கணநோக்கியாறுசெலலுங்காலையின்
மூக்கணையகவிந்தமுனிவனைப்போந்தனன்
றக்கதெனவெம்மன்கைதனைநீட்டியே (17)

ஆசிகூறினனவனன்றந்தகாலையின்
மாசறுதவனெனைவணங்கிடாமலே
பேசினுய்கரந்தனைநீட்டிப்பேதைநீ
வாசமுற்றிடுகரீவனைத்திலென்றுதான் (18)

சாபமொன்றிசைத்தனன்றமியனேற்கென்றே
கோபம்வந்தெறிந்தனன் குறுமாமுனிற்
றூபரமில்லைநின்சலத்துக்காற்றலே
னீபமென்றடிதொழுதுநின்றனனை (19)

அஞ்சலிசெய்திலனென்றகந்தைசேர்
கெஞ்சுடைமூடநமபிடத்தினீகொடு

---

14. கம்பிதம்-நடுக்கம்.
17. எம்மன்-எமது அரசன்
19. சலம்-கோபம்

வஞ்சனையுற்றபொய்வார்த்தைபேசலால்
விஞ்சியபாதகமேவினையன்றே (20)

இப்பவந்தீர்வதற்கியம்புவோமுனக்
கொப்பறுமாநகமாபுரத்திலொன்றிநீ
யப்பதிதனிலெம்மையருச்சிப்பாயெனி
லெப்பவங்களுமறுமெய்துவென்றனன் (21)

நாதனுமருள்செய்யநாரதன்பணிந்
தோதுபற்பலதுதியுஞற்றித்தன்னுடை
யேதமதகற்றுவானெழுந்துவேலைசூழ்
பூதலத்துபயமாபுரத்திற்போந்தனன் (22)

இன்றவனேகவெம்மிறைவன்பக்கலி
னின்றகாளாயனேநீயக்காரிசொல்
லின்றியேகதையெறிந்திடுகொடும்பிழை
யினற்றவுபயமாபுரத்திலையதியே (23)

ஆங்குநீசென்றெனையருச்சிப்பாயெனி
னீங்குறுபாதகந்தீருமென்றலு
மோங்குசெண்டாயுதக்கடவுளோடுமே
பாங்குடனவனுமப்பதியிற்போந்தனன் (24)

துங்கநாரதனெனுமுனிவனாயதோர்
கெங்கையாகியபெருங்கிருபைமாநதிப்
பொங்குதண்புனலிடைமூழ்கிபுண்ணியன்
பங்கயப்பதத்தினைபரிந்துபூசித்தான் (25)

பரிவினோராண்டவன்பரவிப்பூசனை
புரிதரமுவலானபொலிந்துதோன்றியே
யுரியநம்பூசனையுஞற்றலானுனை
விரவியபாதகம்வீட்டினேமின்றே (26)

22. ஏதம்-குற்றம்
23. காரி-ஐயன்
26. பரிவு-அன்பு-உஞற்றல்-செய்தல்-வீட்டினேம்-ஒழித்தோம்.

இப்பதியடைதலேசரியையிற்கதி
யப்பிடையாடுதல்கிரியையன்பினொ
லொப்பறுபூசனையுஞற்றலேயோகமாஞ்
செப்புநம்முறைத்தெரிசித்தனஞானமே (27)

என்றுரைத்திறையவனிகலிலேனொடுனக்
கன்றுகாளாயனங்களித்தசாபமு
மின்றலவனுக்கனுக்கிரகமாமென
வொன்றினனிங்குத்துறையுயர்ந்தமாதவன் (28)

அரனடிவணங்கியாவடையனறன்னொடு
விரவியநன்மொழிவிளம்பிவேலைசூழ்
தரையினிலறவிலாத்தகைமைசானுமிந்
திரனுலகத்தினிற்சென்றமேயினன் (29)

கண்ணுதறன்னைக்காளாயனாருவர்
றெண்ணறுபூசனைபுரிந்துவந்தபால்
வண்ணநாயகனவெளிவந்தன்பான்மிக
நண்ணியபாதகமொழிக்கண்ணினமை (30)

என்னவுமருள்புரிந்திகலிலேறொடெதி
ரொன்னலருயிரொலாமுண்ணுந்தண்டமொன்
றன்னகாளாயனுக்களிக்கப்பெற்றவன்
மன்னியகடனிறவையனபால்வந்தான் (31)

அறுசீர் விருத்தம்.

வந்தகாளாயனக்கவனாதிபுரமகிமையெலாம்
வழுத்தக்கேளாச்
சிந்தைமகிழ்ந்தையன்விசித்திரவிரதமிவர்ந்துவந்தச்
சிவலிங்கத்தைக்
கந்தமலர்கொடுபூசித்திருந்தனனவ்வேலைவயிற்பூங்
களவிலைமேவு
மெந்தையுளமுவந்தவன்முனந்தோன்றினன்மால்விடை
யினமிசையிறைவியோடும் (32)

தோன்றியவெம்மையனையன் றனைநோக்கிச்சித்திரத்
தேர்தூண்டிநீவர்
தான்றனைமைப்பூசனைசெய்தமையாற்சித்திரவிரத
வையனென்று
தான்றிருப்பேர்பெற்றிருப்பாயடியவர்க்குவேண்டும்
வரந்தக்கதென்றோதி
மான்றிகழ்செங்கரதலத்தவ வள்ளனபலைமடந்தை
யொடுமறைந்தானன்றே (33)

கலிவிருத்தம்.

ஞானமாதவர்காணுமனமெபாரு
மானுவந்துவழுத்தியவாறுளான
கானுறுங்கனைகளாவிலிங்கத்தினி
சானிதான் சாத்தனமகிழ்ந்தரோ (34)

நாரதகாளையர் பாவந்தீர்த்த சருக்கம் முற்றிற்று.

ஆகச் சருக்கம் 18க்கு விருத்தம் 558.

---

பன்னிரண்டாவது

## யமவாதை யொழித்த சருக்கம்—தி.

கலிவிருத்தம்.

சூதைநேர்முலைத்தோகைபங்காளனெந்
தாதைபால்வணன்றனறலத்தேயம
வாதைதானணுகாதுசெய்மாதிருக்
காதைதன்னைச்சிறிதுகழறுவாம (1)

அகவல் விருத்தம்

கந்தமுறுந்துமலர்ப்பூவகளாவனத்தென்கயிலையெனக்
கருத்துட்கொண்டு
வந்துறையுந்திருக்கருணைவள்ளலெனத்திகழ்சிவபால்
வண்ணனெம்மா

னந்தணர்வானவரெவருமறிவரியவேதமுட
னமுதமிந்து
விந்துபிரணவமெனுமோர்நான்கும்வரவழைத்தினிது
விளம்புவானலை (2)

கலிப்பா.

கஞ்சமலர்த்தடமபுடைசூழ்கருவைவளம்பதியதனிற
பஞ்சகுரோசத்தினுக்குளுற்றிடுகற்பலவுயிர்க்கு
மிஞ்சியமவாதையினியனுகாமேவெற்புருவா
வெஞ்சலினுற்றிசையினுநினைறினிதுபுரந்திடுமினென்றான் ()

திங்களணிசடைப்பெருமானசெப்பியசொற்கேட்டுவந்து
தங்கினதவ்வுமுகமிந்துசயிலமெனக்கீழ்த்திசையிற
பொங்குகடலுலகமெலாம்புகழதாருற்பிரணவமுத்
துங்கமுடனின்றதுசீர்துலங்கியசெககணதிசையில் (4)

மெச்சுபெருந்தகைகையுற்றமலிந்துவிந்தைறதுயாலப
பசசிமதிகங்கனிலவேதப்பகர்தருமுத்தரதிசையி
லிசைசையொடுநின்றதுதன்னிணையடித்தாமரைபணிவோ
ரச்சமொழித்திடுமினெப்போயானருளியசொற்படிமாதோ (5)

மூத்தசுதனெனுங்கயமாமுகனவ்வுவேற்குகனுயர்மா
சாத்தனவயிரவனெனனைச்சாற்றமொருநாலவரையு
மேத்துமிமையவர்கமக்காவிங்ஙவிடநுகர்ந்தவரைக்
காத்திருக்களாவுடையானறிருவுளத்திற்கருதினனலை. (6)

எநதைதிருவுளமதனினினைத்தலுமேயினிதுணர்ந்து
வந்தனர்நால்வருமிறைதாள்வணங்குவனுரைபெருமான்
சிந்தைதனினின்றுநபைநினைத்திடநாஞ்செய்ததென்னே
முந்துதவமெனவுவகைப்பெருங்கடலுண்மூழ்கினரால் (7)

---

4. உத்துங்கம்-உயர்ச்சி
5. பச்சிமம்-மேற்கு உத்தரம்-வடக்கு

அவர்தலைமையெம்பிறைநோக்கியறைகுவன்யாம்வீற்றிருக்கும
பவமறுமித்தலமதனிற்பஞ்சகுரோசகதினுக்கு
ளுவகையொடுமருவுமெல்லாவுயிர்க்குமயமவாதையொடு
நுவல்ரியபெருங்கொடியநோயுமணுகாமலரோ (8)

நாற்றிசையினுற்றிடுமவ்வமுதயிந்துநகமுதலாச்
சாற்றியவோர்நால்வரையின்றடஞ்சிகரத்திடையிருந்து
போற்றிடுமினவண்ணமிங்ஙனந்துபோமினெனப்புகன்றணுற்
றேற்றமுடனிறுதியெனச்சொலுமிரண்டுமில்லாதான் (9)

பூரணைபுட்கலையெனுமப்பூங்கொடிகளுடனவெள்ளை
வாரணமீதிவர்ந்துசுடர்வயங்குபெரும்படைகள்
சீரணியுங்கரத்தேந்தித்திகழமுதசுரியதனிற
ஞாரணியானையும்பாவச்சாததனமர்ந்தனன்மாதோ (10)

அன்றுமதகயவதனத்தவுணனையவ்வருஞ்சமரில்
வென்றுசுரர்தமைப்புரந்தவேழமுகத்தெம்பெருமான
றன்றுபலபடைகளுடன்றுலங்குமூடிகத்தேறிச்
சென்றுபிரணவமலையின்சிகரமதிலிருந்தனனால் (11)

தனதுதிருக்கரதலத்திற்றெரியலர்கண்டுளம்வெருவுஞ்
சினமுறுமுத்தலைவேலுந்திறமுறுந்தண்டமுந்தாங்கிக
கனமுடுவெற்படைசூழகக்கரும்புரவிமிசையேறி
மனமகிழ்வுற்றெய்தினிருமலையாலயவயிரவனிருந்தான். (12)

எற்றுதிரைக்கருங்கடன்மேலெழுந்தவிளங்கதிரவன்போல்
வெற்றிவடிவேற்படைதன்விளங்குதிருக்கரத்தேந்தி
நற்றணிமாமயிலேறிநண்ணியறுமுகப்பெருமான்
குற்றமிலற்புதவேதக்குன்றிடைவீற்றிருந்தனனால் (13)

ஆகச் சருக்கம் 19-க்கு விருத்தம் 571.

யமவாதை யொழித்த சருக்கம் முற்றிற்று.

---

9. நகம்-மலை வரை-மலை 10. படை-ஆயுதம் 11. மூடிகம் பெருச்சாளி 12. முகேல்-நாய் கரும்புரவி-கருங்குதிரை

பதின்மூன்றாவது

## தக்கன் வேள்விச்சருக்கம்—வீ.

---

அறுசீர் விருத்தம்.

புரமொருமூன்றுமட்டுவேவப்புன்னகைபுரிந்தமுக்கட்
பரமனையமரர்யார்க்கும்பரம்பொருளெனவுன்னுமே
வரமுறுதக்கன்செய்தயாகந்தனைக்கண்டானைசென்ற
பிரமனமான் முதலோர்யாவரும்புரிகோர்சரிதஞ்சொல்வாம்

எழுசீர் விருத்தம்.

பண்டொருகாலமயனுறுபுதல்வர்பதினமரிற்
றலையகவாய
திண்டிறலுடையதக்கனென்றொருவனம்மையாற்
செகமெலாந்தாங்க
கொண்டிடவேண்டுங்குறிப்புடையவனுக்குளிர்
மதியிரவிவெங்கனலாங்
கண்டலமுடையகடவுளைநோக்கிப்புரிந்தனன்றவ
நெடுங்காலம் (2)

அக்கணிசயலீசனுற்றிடற்றண்ணலப்பொழு
தருந்தவம்புரியுந்
தக்கன்முன்றோன்றிவேண்டியதென்கொல்சாற்று
கென்றலுமவன்சாற்றுஞ்
செக்கர்மேனியநின்றேவியாமுமையென்செல்வியாய்
வந்திடவுனது
மிக்கநற்கருணைபுரிந்திடவேண்டுமென்றலு
மருளினன்விமலன் (3)

ஆங்குநல்வரந்தான்பெற்றபினிமயாசலமரு
ளுமைதனைநோக்கி
போங்குறுதவஞ்செய்தனன்செயும்பொழுதெவ்
வுலகமுமீன்றவெம்மிறைவி

பாங்குறுமகரத்தடத்தில்வெள்வளைமேலொரு
பசுங்குழவியாயுதித்தா
ளுங்கறுதக்கனிருவிழிகளிக்கக்கண்டுதன்செங்
கையாலெடுத்தான் (4)

முதிரொளிவளையிலுதித்தவோராணிமுத்தெனக்
கண்டினிதெடுத்த
புதியவோர்மகவைத்தன திருமனையாள்பூங்கரத்
திடைகொடுத்திடலு
மதிநிகர்வதனத்தெரிவைதன்கரத்தால்வாங்கினள்
வடமணிந்திலங்குங்
கதிர்முலையமுதஞ்சுரந்ததுநெஞ்சமுவகையங்கட
லுளாழ்ந்ததுமே (5)

ஓகையினுடனந்தணர்தமைக்கூவியுதித்தநாட்
சாதகமவருத்தி
யாகமவழிநலவித்துகளுதவியருநிதிக்குப்பைக
ளளித்துப்
பாகுறுமிசைவாணருக்கமுதூட்டிப்பல்பணியாவை
யுமவழங்கிச்
சோகமின்மறையுங்காணுமயிலைத்தொட்டின்
மேல்வைத்தினிதாட்டி (6)

நாளொருவேழிற்காப்பிணையணிந்துநகைமணி
யரைவடஞ்சாத்தித்
தாளிடைச்சதங்கைபரிபுரமணிந்துதரளமாமணி
முதன்மணியின்
கேழ்கிளர்கோவைவடம்பலதரித்துக்கிளர்மணிச்
சுடிகையும்வனைந்து
வான்விழிகளிலஞ்சனமணிந்தன்பினொடுவளர்த்திட
வளர்ந்தனளால் (7)

5. மதிநிகர்வதனம் - என்றமையால் பொதுத்தன்மைத் தொகையுவமையணிகதிர்-ஒளி
7. கேழ்-நிறம் சுடிகை-சுட்டி

மதிதவழ்சடையுமறிமழுக்கரமுமறைத்தொருமு
தியவனாக
யெதிர்வரக்கண்டுதக்கனுங்கெய்திமனமிலையக்தொ
ருமொழியியம்பும் (11)

நான்மறைமுதியோயுனக்கருமறையினுள்ளுறு
நற்பொருள்வருமேல்
யானுணர்ந்திடநீயுரையெனவிறைவன்யாவருமறி
யொணுப்பொருளைத்
தானுரைத்திடலுந்தக்கனுமகிழ்ந்துதருமெனக்
கொண்டுவந்தெழில்கூர்
வேனிகர்விழியாடனையருமறையின்விதிமுறை
மணம்புணர்வித்தான் (12)

தக்கனறன்மனைவியானவள்சலித்துதனக்குவே
றில்லவடனையே
யிக்கிழவனுக்கோகொடுத்தனனென்றேயிருந்து
யர்க்கடலினுளாழ்ந்தா
ளொக்கலும்பரிவுற்றிரங்கினரதனையுணர்ந்திறைய
வனறனதுருவை
யக்கணந்தோற்றிமறைத்துமையவளோடகன்ற
னன்மழுவிடையதனமேல் (13

இச்செயலறிந்ததக்கனென்புதல்விதன்னையேவேற்
றுருவெடுத்தே
யச்சிவன்கொண்டேகினதழுகம்மாவென்றுதன்னக
மிகக்கொதித்து

---

11-வதுவை - கல்யாணம் - இயம்பும் - சொல்வான் - பல்லே
படர்க்கைமுன்னிலைதன்-மையிற்-செல்லாதாகுஞ்செய்
யென்-முற்றே - என்னும் விதியால்-உயர்திணையாண்
லொருமைப்படர்க்கையில் வந்தது

நச்சராவெனத்தன்றுணையோடெழுந்தானுமிவே
யென்னுடன்பகர்ந்த
பொச்சமாமறையோய்போகனீநில்லென்றடர்ந்தரு
மேறெனப்பொருதான (14)

ஒல்லையிலமலன்வெகுண்டடர்ந்தெழுந்தேயுலப்பருந்
தானையைமடித்துப்
புல்லறிவுடைப்தக்கனைத்தாரற்புடைத்தலுந்
தீமொழிபுகன்றே
செல்லுறறனன்றன்பதிதனிலந்தத்திமையோன்
சேவினைபுகைத்துத்
தொலையாவெளிவெற்பினையடைந்தானன்றேறமு
மீறுமில்லவனே (15)

எண்ணறுங்காலங்கழிந்தபினவிரிஞ்சனிமையவர்
முனிவர்தம்மோடு
மண்ணறனகயிலையடைந்தனனந்தமலன்பால
டைந்தநடடலே
விண்ணவரோடிமையவிவண்போந்தானென்றனும்
விடுகெனவிறையோ
னுண்ணெகிழ்ந்தநளோடுரைத்தலும்பிரமன்சென்
றடிபணிந்துரைசெய்வான (16)

அருட்பெருங்கடலேயடியனேனரியயாகமொன்றிய
ற்றிடக்கருதி
விருப்புடனறிருமுன்னடைந்தனனவியாங்குவந்
திடவேள்வியினியுந்
திருக்கருணையினுலெழுந்தருளென்றன்செல்வமே
யெனவுரைத்திடலு
மருப்பொறிமடுக்கைச்சடிலனந்தியையாங்கேகென
வழுத்தினன்மாதோ (17)

---

15 சேணுறுது-உகைத்து-டெத்தி-தொல்லை-பழமை-ஈறு-முடிவு.
16. விரிஞ்சன-பிரமன்-போந்தான்-வந்தான். 17-திரு-சன்னிதி.

அப்பொழுதயனுமரியோடிமையோருமறைமுனி
வர்சூழச்
செப்பருங்கயிலைதன்னைவிட்டகன்றுசென்றநம்
பூலகிடைப்போந்தாங்
கொப்பருவேள்வியியற்றுதற்கிசைந்தனுணர்ந்தனன்
றக்கனுமொழிய
வெப்பமோடெழுந்துதந்தைபாற்குறுகிவெகுண்
டொருமொழிபகர்ந்தனனால (18)

சுடலையாடரங்காயென்பணியாய்த்தோலாடையாயூர்
தொறும்பலிகொண்
டிவ்வேதெழிலாய்க்கொண்டவன்றனையோரிறை
யெனவேள்விபுரித
லடைவதனறவனுக்கவியுதவிடலவ்வேள்வியும்பழு
தெனவெகுள
மடலவிழ்கமலத்தவிசுறைபுத்தேண்மனமயர்ந்தஃ
தொழித்தனனால் (19)

நீதறுமொழியாற்றக்கனங்குரைத்தசிறுமையை
நந்தியுங்கேட்டுப்
பாதகாசிவனையன்றியேயாகம்பண்ணவுமுடியுமோ
வவிதா
னாதனுக்குதவாவேள்வியுமுளதோவதிற்பலனல்
குவதெவனோ
யாதுநீயிறைவன்றனையிகழ்ந்துரைத்ததுன்றலையின்
றரிந்திடுவேன் (20)

பங்கயத்தொருவன்புதல்வனுதலினுற்பொறுத்தன
னென்னவேபகர்ந்து
மங்குறேய்வெள்ளிவரைதனினந்திபடைந்தனன்
மகத்தினுக்கடைந்த

---

19. அன்று-எதிர்மறைக்குறிப்புவினைமுற்று-புத்தேள்-தெய்வம்.

வெங்கணுமுனமாமுனிவரிமையோரரனைப்பின்னை
ரர்புவியனைத்
செங்கண்மான்முதலோர்யாவருந்தந்தமுறைநவிடஞ்
சென்றடைந்தனரால் (21)

## கலிவிருத்தம்.

நன்னெறியிறக்கவொருஞான்றமனதின்று
னுன்னினன் முடிப்பரிய தாயசெயலொன்றைப
பொன்னுலகனுக்கிறைவனையொருமகன்மருளன்
றன்னொடயனைவானவரைத தான்வரவழைத்தான் (22)

ஆண்டவரடைந்திடலுமாங்கினிதடைந்த
வேண்டுமிமையோர்தமையிருப்பியொருவேநோக்கிக
காண்டருமகந்திசெலக்கண்டியபயமுற்றே
மீண்டுபெருவேள்விபுரியாதிவணிருந்தீர் (23)

ஈசனுலகுக்கிறைவனென்னநினைவுறாப்
பேசவது தானுமதுபேதைமையதாமாற்
காசினியின்மீதுநலிகண்டவர்கள்யாரு
மேசிடவுமன்றுபணியேறறமுழுதுகர்ந்தான் (24)

ஓர்க்கிமினீர்சடிலையுறநுணர்வினைதனும்
போர்நதுகடமாடுமொருபித்தனவனன்றே
வார்ந்தபுகழ்மேன்மையுளநாமனைவருந்தாஞ்
சோர்ந்திடலவன்றனதுசெய்கையெவனுமால் (25)

என்றவனரன்றனையிகழ்ந்துபலகூற
வென்றிபெறுமாயன்முதல்விண்ணவர்கள்யாரு
நன்றெனவிசைந்தனையதவணிருந்தார்
வன்றுயர்வரும்பொழுதுபாறுமதியன்றோ (26)

இப்படிமயக்கியிமையோரைமுனிவோரை
யொப்பரியவேள்விசெய்வதற்குமனதன்னி

---

25-எவன்-என்ன-னும்-ஆகும்

யப்பிரமன்மைந்தனுயரண்டமுகடெட்டச்
செப்புமகசாலைகள்சிருட்டிசெயலுற்றான் (27)

வேதிகைகுண்டங்கள்பலவேண்டுவவமைத்துக்
கோதில்பொருள்பற்பலகொணர்ந்துதரவேதா
ஆதரவுடன்புரியுமந்தமகமேன்மை
யீதளவதாமெனவெடுத்துரைக்கலாமோ (28)

ஈசன்மனதிற்சினமெழுந்தபொழுதிந்தக்
கேசவனுமவேதனுமிறைஞுதல்செய்கின்ற
வாசவனுமவானவருமற்றையருமங்கோ
லிசொளிவிளக்கில்விழுவிட்டிலெனவெண்ணான் (29)

இந்திரன்முதற்சுராகண்மாலயனிவர்க்கு
மெந்தவலியமபினுடனையுதவவேண்டிக்
கந்தமலரோன்புதல்வனுங்கடிதினெய்தி
வந்தனனமைத்தமகசாலையுண்மகிழ்ந்தே (30)

முக்கணனையன்றியயன்மான்முதலினோராற்
றக்கனுயர்வேள்விபுரிதன்மைத்தனையாங்குத
தொக்கதவமேவியததீசிமுனிசூழ்ந்தே
யக்கணமத்தக்கனையடைந்துரையலுற்றான் (31)

தொன்மையுலகுக்கிறைவனைபரஞ்சோதி
யின்மையிலிவேள்விநிறைவேறுவதெவ்வண்ண
முன்மனதின்மாலயன்விணோர்களுளராக
நன்மைபெறும்வேள்வியெனவேமிகநயந்தாய் (32)

எண்ணரியவேகமொடெழுந்திடுவிடத்தால்
விண்ணவரிமான்முதலினோர்வெருவியோட
வுண்ணெகிழவேகருணையுற்றவிடந்தன்னை
யண்ணல்களந்தன்னிலுமணிந்ததறியாயோ (33

---

28-ஓ-எதிர்மறையிடைச்சொல்.
30-அவி-தேவருணவு.

பண்டிறைவனுண்டவிடமபற்றிவரும்போழ்தி
லண்டர்முதலோரபயமென்றிடுமொலியின்
மண்டெழுமின்புகைவயங்கிபகனிவ்
விண்டுவநவகைறுத்துகிட்டகறியாயோ (34)

ஒப்பிலுமையாணையருளவுமீசனுமுனமோர்நாட்
கைப்புறுமகக்கைதயதுசெய்திடுதலைகண்டு
செப்புறுதமேனெருங்கிறைமைசெய்யவேயுன்
னப்பனையுமோர்தலைபரிந்ததுணராயோ (35)

பாகனமொழிக்கவுரிபாகனையலாதன்
யாகமிறைவேற்றுபவர்யாரெனநினைத்தாய்
மாகொடியவாவயனிமால்பிறவியாய
சாகரமுளோர்களனைத்தனைமையறியாயோ (36)

எனமனமாயருளவெடுத்தயனுமாலுந்
தானுணர்வதற்கரியதற்பரனுஞ்செய்
வினைமகமாயவுமுனிந்திடுமரம்வலலை
வானவர்முனிறபிரனவேமனதிலெண்ணேல (37)

என்றுமொழியாமுனியியமபியடதககா
வுன்னுடையவேள்வியுடனுன்னுயிருமின்னே
சின்னமுறமாவிஃதுதிண்ணமெனவேதா
னுன்னரியசாபமதுநல்கியகலவுற்றான் (38)

இத்தவகைபாகமழியறுசெயறன்னை
யுத்தியுணர்க்தேகருணைநாதனிடநண்ணி
பந்தமிலவாகொடியதக்கனறிவில்லான்
வெந்தவவிதேவர்பெறவேள்விபுரிகின்றான் (39)

---

35-கைப்பு-வெறுப்பு-36-அன்ன-உவமவுருபிடைச்சொல் அவை
வென நின்றது செய்யுள் விகாரம் இ-சுட்டிடைச்சொல்.

37-எல்லை-காலம்-எண்ணேல்-என்பதில்- எல்லை தீர்மனைறவிய
க்கோள்விகுதி-நினையாதே யென்பது பொருள் 39 அந்தம்—முடிவு

என்றபொழுதேயுமையைநோக்கியிறைகூறு
முன்றனதுதாதையிமையோரவியுவப்ப
வென்றிபெறுவேள்விபுரிகின்றனன்விரைந்தே
யின்றவனையாருயிர்முடிப்பதியல்பென்றான் (40)

அத்தகைமைகண்டவுமையாண்மனநடுங்கி
வித்தகனமலர்ப்பதம்விழுந்தினிதிறைஞ்சி
மெய்த்தகவிலாதவனிடத்தில்விரைவிற்போய்ப்
புத்திவருமாறுபுகன்றேவருவனென்றாள் (41)

ஏதமுறுதக்கனவனைத்தனைசொலுமு
போதமுறுநீயுரைசெய்புத்தியுணரானென
றோதவுலகீன்றவளுமோர்பிழைபொறுத்தி
காதவெனநேயமுடனேநவிலலுற்றாள் (42)

அன்னமொழிகேட்டிறையவன்னருளிநேறு
புன்னகைபுரிந்தினிதுபோவெனவுரைத்தான்
பொன்னொளிவிமானமிசைப்பொற்புறவெழுந்தாள்
மின்னிடைபரம்பையர்கள்வெண்கவரிவீசு (43)

துன்றுபலவாத்தியமுழங்கவளிசூழ
மன்றல்கமழ்புட்பமழைவானவர்கடூற்றச்
சென்றனள்விரைந்தினியசிக்கையருளேகூர்த்
தன்றனுடனாதாதையருகம்மா (44)

உன்னியுலகுக்கிறைவியென்றுமனமோரா
னன்னவடனக்குமகவாகுமெனவெண்ணித்
தன்னடிபணிந்திலனெனத்தறுகணாளன்
முன்னமவணிற்பமுனிந்தானுமைமொழிந்தாள் (45)

முந்தவொருவற்கெனையளித்திடமுயன்றாய்
நந்தையையிகழ்ந்துமகநன்குபுரியென்றாய்
தந்தியுரியோர்க்கவிதராமலிமையோரா
லிந்தமகநீபுரியவிப்பொழுதினைத்தாய் (46)

---

46-தந்தி-சிவன்.

இக்குறைகண் மூன்றையும்பொறுத்தனனென்றாலே
முக்கணனையன்றியுயர்வேள்விமுடியாதா
லக்கடுவரும்பொழுதங்கதைகறுத்தபாலோ
மிக்கபெருவேள்விசிதைவுறுமிவண்வெய்யோய் (47)

உத்தமமறைக்கிழவனுக்கவைசகியொன்று
வித்தகனநாளளிந்தனிட்டதுணையாமோ
வேதநிறமகத்தினையியற்றிநவையுந்தோ
பிதத்தனைநிகர்த்தனைபிழைக்குரியனுனை (48)

வேதனுடனேமாலுமறிவில்லமையினின்மேனுட
பாதமுடிகாணவனையாரறியுநவாகி
யோதரியகாலநனிதேயுமுணர்ந்தாரோ
வாதனினினோபெரியராவர்கொலமமா (49)

நத்தணிகரத்தவனுநான்முகனுமுன்னஞ்
சித்தமயர்வுற்றுநனிதேடியறியாதோ
னத்தனெனிவிக்ரான்முனனவிமையோர்தா
மெத்தகையராவாசிறிதீசனமுனிவுற்றால் (50)

கைதவமனத்தையுடையாய்கழகேகண்மோ
வையகமொராயவிளகதும்வானமையுடையோனும்
வெய்யவனெனிகெரிவிளக்கொளிவொப்பாகின்
மையிவிறையோறதுகெடுமாயனிளையாவான் (51)

அந்தமுதலென்பனவகன்றவிறையோனை
நிந்தனைபுரிந்தகொடுநெஞ்சமுறுபேதாய
விந்தைபெறுசூரியனைமின்மினிநிகர்த்தா
னந்தையுமெனுயகனையொத்திடுவன்மாதோ. (52)

வெய்யமதியோயுனதுவேள்வியுமவந்தோரு
மையமுறநீயுமினியழிகுவனவேதான்
றையலுமையாள்சபிக்கத்தக்கன்வெகுளுற்றுப்

50-அத்தன்-சிவன்-51 கைதவம்-வஞ்சகம்.

அண்டமுழுதுங்கிடுகிடென்றசையவேதான்
சண்டகதிகொண்டுகனித்தக்கன்மகநோக்கித்
திண்டிறல்கொளும்பரியதேரின்மிசையேறி
யெண்டகையவீரனவனேயனனைவிரைந்தே (67)

இக்கடியவீரனுடனேகடிதெழுந்த
மிக்ககணபூதர்கணமிகுந்தசினமோடு
புக்கனரடற்பகைபுடைத்திடுதுமென்று
தக்கனவனவைத்தமகசாலையவணைந்தார் (68)

சேனைதனையேநிறுவியேதிறல்கொள்வீரன்
றானொருவனாகமகசாலையுணடைந்தே
மோனமுடனேவெள்வியின்முகத்திலமர்தக்க
னானவொருபாதகனைநோக்கியறைவானால் (69)

அறுசீர்க்கழிநெடிலடியகவல் விருத்தம்.

இந்தமாமகத்திறமேறவர்க்கினிதவியீந்தனீயே
யந்தமிறெழிலகளந்துமுடையவனாயினாயோ
பந்தமாமிமையோர்சுற்றும்பான்மையால்யாமுமீங்கு
வந்ததுமுணர்கிலாயோமவுனமுற்றனைகொனீயே (70)

மாலயனுன்னைப்பூசைசெய்திடவந்துளாரோ
சீலமாரிமையோர்கிட்டாத்தெரிசனைக்கெழுந்துளாரோ
சாலவிவ்வுலகுக்கெல்லாமிறைவனுந்தகையுற்றாயோ
மேல்வருங்கருமமோநம்பெருமையுமேனினாயோ (71)

அங்கணையிகழ்ந்துநீதான்விருப்புடனாற்றுகின்ற
வுனதுநன்மகத்தில்வந்திங்குளமகிழ்ந்திருக்குமாலோ
டினியமாமலரோன்வானோரிவர்க்கவியீந்துநாமுன்
றனதுவேள்வியினுக்குளபலனையுந்தரவந்தேமால் (72)

நானவியளிப்பேனென்னநீகொளெண்ணமுமீங்குற்ற
வூனமாரயன்மால்வானோருனைப்புரக்கின்றவாறு
மோனமாய்வேள்விமுற்றுந்தன்மையுங்காண்டும்பேதா
யீனர்கள்செல்வம்பெறாவிடும்மையேவினைப்பான்றே (73)

ஆண்டகைவீரனிவ்வா றறைதலுமிரக்க
வேட்ட
பூண்டவேதவா றகலிலையென்றிடிற்
போவதன்றி
மீண்டுரைசெய்வதுண்டோவெனவிளம்
பினனத்தேவர்
கண்டபோரவையிற்றக்கனெனும்பெயர்க்
கொடியோனமாதோ. (74)

அத்திறமவனுக்கூறவீரனுமரனை
பாரின
மெய்த்தனிப்பசுக்கட்கெலாம்பதியென
விளம்புமவேத
முப்பதவெதொழுமுருமீசனைநீ
யுரியனுகா
வெத்தொழிலினுக தீயேயுரியனே
வியம்பாயெனான் (75)

இதற்குரையொன்றுஞ்சொலலாததக்கனை
யிடறுதாளா
லுதைத்தவனறகைதசெனனியுறக்கையாற
புடைத்துவெய்ய
கதக்கனறகடவுளவுனகையுமே
மிகவுஞ்சீறி
மதிட்கிடுதனதுசெங்கைவாளினலறுத்து
வீழ்த்தி (76)

இரவிவானவனறன்கண்ணையெயிறறினைப்
பிடுங்கியாங்கே
விரவுருத்திரரைக்கையால்வேலியிலெறிந்து
தண்சந்

78-முற்றம்-முடியும்-காண்டும்-காண்போம்-இம்பை-துன்பம்.

திரண்மருத்துவசைத்தானையற்றை யயிலைத்
தேய்த்தோட்ட
வுரவசுக்களைச்சினத்தேயடித்துயிரொழித்து
விட்டானை (77)

இப்படியியற்றியாங்கேவரும்பொழு
திடத்தாளா
லொப்பருவீரனை முன்னர்த்தாக்கிடவுயங்
கியாக
வைப்பிடைக்கிடந்த தக்கன் வாண்முக
நிமிர்ந்துநோக்க
வெப்பனலிடைப்பெய்தானவ்வெய்யவன்றலைக்
கொய்து (78)

புக்கணர்தன்னிற்பூதகணங்கள்வந்
தடைந்துநின்ற
மிக்கதேவரைத்தங்காலால்விசும்பிடை
யெற்றிப்பின்னர்க்
கைக்கழுவாலேயேந்திக்கழியவிட்டெறிந்
துவேள்வி
நெய்க்குடமனைத்தும்வாயின்மடுத்தன
நெடுங்கைநீட்டி (79)

கரிகளைவாலிற்பற்றிக்கால்விசைத்
தெறிந்துவீரப்
பரிகளைக்குரத்திற்பற்றிப்பதைத்திடவடித்
தாங்கோம்ப
பொரிகளையொன்றுக்கொன்றுபுகட்டிவாய்
குதட்டிவேள்வி

---

77-அட்டம்-எட்டு-உரம்-வலிமை-வசுக்கள்-ஒருவகைத்தேவர்
எயிறு-பல்-வேலை-சமுத்திரம்-

றகமிகக்கொதித்துவெள்ளையானைமீதி
வர்ந்துதேவர்
மிகவிருபாலுஞ்சூழ்ந்துநெருங்கிட
வேள்விநீங்கி
யிகல்புரிகளத்திற்போந்துவீரனையினிது
கண்டான் (84)

கோரவீரனுந்தான்கண்டுகுறுநகை
புரிந்துகற்ப
தாருவானவனைநோக்கித்தக்கன்மா
மகத்தில்வந்து
நீரவிப்பாகம்வாங்காநிருக்கின்றீர்நீவிர்
கொள்ள
வோரவிப்பாகம்பாமீங்குதவுதும
பெறுகவென்றே (85)

இந்திரன்காத்தைக்கொய்தாங்கியமனல்
வயிற்றைக்கீறிப்
புந்தியினிருதிவெய்யகழுத்தினைப்போக்கிப்
போரில்
வந்தவாயுவையுந்தாளைத்துணித்துயர்
வருணன்மார்பு
சிந்திடவாளாற்போழ்ந்துமதனையுஞ்சினத்
திற்றாக்கி (86)

சினமொடுவீரனின்றசெயலினைத்
தையுமேகண்டு
தனதனீசானனென்னுமிருவருந்
தாமேயஞ்சி
மனமயர்ந்தாங்குநின்றவீரனைவணங்
கியாமு
முனதடைக்கலமென்றன்னேருரைத்தலும
பயமென்றான் (87)

மாயவன் றானும் பின்னர்ப் பலபல வடிவ முற்றுக்
காயெரி யென்னச் சீறிப் பொருதன னன்று வீர
னேயபல் லுருவாய் நின்று பொருதுபின் னெதிர்த்த மாய
னோவுறு மாறு மார்பி லடித்தலு மயக்க முற்றான். (95)

மாதவன் மயக்க முற்ற வாறுகண் ணுதலு மோர்ந்தப்
போதுமை யொடுவெள் ளேற்றிற் றோன்றியே புலவர்தம்மைக்
காதிய வீரன் றன்னைத் திருக்கையா லமைந்த காலைத்
தாதவிழ் கடுக்கை வேணிச் சங்கர னடியிற் றாழ்ந்தான். (96)

அமலன் வெள் விடையின் மீதே யாங்கெழுந் தருளக் கண்டு
கமலநான் முகனு மாலுங் கற்பக நாட்டு வேந்துந்
தமதுமா மயக்க நீங்கித் தடங்கணீ ரருவி சோர
வுமையொரு பாகா காவென் றோலமிட் டடியில் வீழ்ந்து. (97)

தேவர்க டேவா போற்றி செகப்பசு பதியே போற்றி
பூவலர் கடுக்கை வேணிப் புண்ணியா போற்றி யாஞ்செய்
பாவமா னவையுமே போக்கும் பரஞ்சுடர்க் கொழுந்தே போற்றி
தாவறு கயிலை மேவுந் தாணுவே போற்றி யென்று. (98)

ஆதிபுரிந் திறைஞ்ச லோடு முமையவ ளிரங்கிச் சோதி
மதிதவழ் சடையி னானை வணங்கியென் னாலே புந்தி
துதியிழந் திழிவு பெற்று நொந்தன ரந்தோ வேறு
கதியில ரிவரைக் காத்துக் கருணைசெய் தருள்க வென்றாள். (99)

விமலையீ துரைப்ப வண்ணல் வீரபத் திரனை நோக்கி
யிமையவர் கமலை வாணி யிறந்துளோ ரிருந்து ளோர்க
டமையளித் திடுமா றீங்குன் றபுனை வேண்டி. னோன்
றமலனு மருள வீர னமரரை யெழுப்பிப் போந்தான். (100)

ஈசனை யெய்தி யன்னோ ரிறைவனே போற்றி பாவ
நாசனே போற்றி முக்க ணாதனே போற்றி யன்பர்
நேசனே போற்றி யெங்கு நிறைபரம் பொருளே போற்றி
மாசிலா மணியே போற்றி வாதனே போற்றி போற்றி. (101)

---

(96)மாதவன்-அரி.(97)அமலன்-சிவபெருமான்.
(100)விமலை-உமையவள். கமலை-இலக்குமி. வாணி-நாமகள்.

